உ

சிவமயம்.

கணபதி துணை.



புலிவலம்

# இராமநாதபிள்ளையார்பாடல்

மதுரை ஜில்லா காரைக்குடி

பி. ரும, கு. மெய்யப்பசெட்டியார்

குமாரரும் ஸ்ரீலஸ்ரீ,

அ. வன்றொண்டச்செட்டியாரவர்கள்

மாணாக்கரி லொருவருமாகிய

## மெய்யப்பசெட்டியார்

இயற்றியது.

இஃது,

மேற்படி காரைக்குடி

ப. அ. அழகியவாணப்பசெட்டியார்

அவர்கள் கூட்டாளி புலிவலம்,

சு. ராமசாமியால்

சிங்கப்பூர்,

நிரேதயவேந்திரசாலையில் பதிக்கப்பட்டது.

விக்ருதி ௵ அற்பசி ௴

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# இராமநாதபிள்ளையார் பாடல்.

## காப்பு.

மன்னும்வினாயகனே வாழ்த்தவுனை யீசனையே
பன்னுங் கவிக்குநலம் பாலிப்பாய்—முன்னருணைச்
சோத்தம்புரிகவிக்கித் தோன்றலையே யல்லாம
லேத்த வுளரோபிறரு மெண்ணி.

## நூற்பயன்.

பெற்றிதிகழ் புலிவலத்தி விராம நாதப்
பிள்ளையார்க் குரியமறைப் பெயரிலொன்றைச்
சொற்றிடிலோர் காலவரை யயன்மால்விண்ணோர்
சூழ்ந்துநறு மலர்தூவித் துதிப்பரென்றான்
மற்றுமவன் திருநாம மாறுதோறும்
வாழ்வுடையார் பெறும்பேற்றைவழுத்தவோர்கா
வுற்றவியானு ரிரண்டா யிரநாப்பெற்ற
வுரகனுரைத்திடவெனினு முலப்புறுவே.

## துதி ஆசிரிய விருத்தம்.

அலர்த்தலை யிருந்தசர வசரமுழுதும்படைத்
தலர்முலைப் பனுவலாட்டி

யகமகிழ முகமகிழ மபனையொரு பொருள்வினு
யறியாமை கன்றி கறுவிப்
புலத்தலை மணத்திடாக் குமதி பூத்தற் றொழில்
புரிந்திடுறகாறு சிறையிற்
பொறியென மேகநதி பாதிமதி யாதியணி
புரிசடைக் கடவுண் மகிழக்
கலைத்தலை மறைப்பிரண வப்பொருளுரைத்திட்ட
கந்தசாமிக் குமறவர்
கன்னிநாயகி மன்றல் கைகூட நீடருட்
கருணையை பொழு மறவேன்
மலர்த்தலை மருத்தரு மதிக்கெதிர் சாப்புலி
வலத்துறை யிராமநாத
மதகரி முகம்பெற்ற மறைபல முகஞ் சொற்ற
மகபதி தொழுங் கர்த்தனே. (௧)

பிள்ளைப் பிறைச்சடில னையிரு தடந்தோட்
பிறங்குபவ ளாசலத்தும்
பேணுசர வசரங்கண் முழுதையு முயிர்த்திடு
பிராட்டிதிரு மடியிடத்துங்
கள்ளப் புலக்குறும் பறவெயிக் தன் பிறைமை
கைக்கொண்ட தொண்டருள்ளக்
கமலத்து மென்மனக்கல்லினுஞ் சொல்லிற்
கனிந்தமறை யுச்சி தனினும்
வெள்ளெயிற் றரியானம் விறலாகு மீமிசையும்
வெங்கட் கருங்கடத்த
வெற்றிபயி ராவணக்குன்றினுஞ் சென்றுலவு
மென்சரண மென்று மறவேன்
வள்ளற் பிரானென்று தொழுமவற் கருள்புலி
வலத்துறை இராமநாத
மதகரி முகம்பெற்ற மறைபல முகஞ்சொற்ற
மகபதி தொழுங் கர்த்தனே, (௨)

பூத பௌதிகவர்த்த மானமமி ஞானமமி
புலவரும் புலவர் கோனும் (னும்
போராழி கைக்கொண்ட மைக்கொண்டல் வண்ண
போதிலுறை யெண் கண்ணனும்
பாதலத்தவரு நிறை மீதலத்தவரு மின்
பத்தி நெறி கைப்பிடித்தே
பரவுகதத்தலைமை பற்றினர்களென்றறிஞர்
பகருவ துணர்ந்து மந்தோ
யேதமுறு மிவறன்மை யுடையபுன் செல்வர்களை
யெண்ணுவே னென்றும் வரையா
தெண்ணிபவை யெண்ணியாங்கெய்தவடியார்க்கரு
ளு மெந்தையை யெணு துழன்றேன்
மாதவத் தொண்டர்கள் வழுத்து மொலியார் புலி
வலத்துறை இராம நாத
ம்தகரி முகம்பெற்ற மறைபல முகஞ்சொற்ற
மகபதி தொழுங் கர்த்தனே. (௫)

அண்டகோடிகண் முழுது மாக்கியும் போக்கிய
மனைத்தையு மளித் தழித்து
மானசங் காரமதி யற்றியும் பேரிளைப்
பாரத்திரோதஞ் செய்தும்
பண்டையி னனுக்கிரக மேசெய்து மிருவினைப்
பாலூட்டி யாட்டி முடிவிற்
பாதமலர் காட்டியருள் பூட்டி மல மாட்டிவெம்
பவமகல வோட்டி ஞானத்
தொண்டரொடு கூட்டியொழி யாவின்பநாட்டுமெய்
தோன்றநிலை கருதாமலே
தோர்முடைய ஞயேழை யானலையலாகுமோ
துணை யுனையலாம லுளவோ
வண்டுமலர் கிண்டமது மண்டுவயல் சூழ்புலி
வலத்துறை இராமநாத

மதகரி முகம்பெற்ற மறைபலமுகஞ் சொற்ற
மகபதி தொழுங் கர்த்தனே. (ச)

நடையாலு முடையாலு மிடையாலும் விடையாலு
நண்ணபி நயத்தினாலு
நாட்டத்தி னாலுமய லீட்டத்தினாலு மவர்
நண்ணு கூட்டத்தினாலுந்
தொடையாலு முலையாலு நிலையாலு மிலையா
னுலங்கு சிறு பண்டியாலுந்
தோளமையினாலுமதி போழிமையினாலு நற்
றுகிரனைய விதழினாலுங்
கடையாலு முகிலனைய குழலாலு மரிவையர்கள்
காமசாகர மூழ்கியே
கரைபெறுஞ் செயலின்றி யுழலுமென் றுயரெந்தை
கருணைதக் கிடிலென்படா
மடையாலு மிளமீன மதிபாய் வயற்புவி
வலத்துறை இராமநாத
மதகரி முகம்பெற்ற மறைபல முகஞ்சொற்ற
மகபதி தொழுங் கர்த்தனே. (ரு)

சும்மா கழிந்தமே னாளெலா மளவற்ற
தோற்றம தெடுத்தெடுத்துத்
தோற்றுது நன்னெறிகள் காற்றடிபோலச்
சுழன்றுசிறி தறமுதவலா
விம்மானிடப்படிவ மெய்தியும்பொருட்
கேயுநெறி யாயுமாறற்
றெண்ணும்வா ணுண்முழுதும் வீணாக விழலுக்
கிறைத்த நீராக்கி முடிவி
னாலு வெனக்கதறி மறலிகைப் படிலென்று
னடிபரவி முடிவிலாதி

னன்பர்களி கொண்டமரு மின்பஷீ டடைவனே
வானந்த மோன குருவே
மைம்மா முகிற்குநிகர் கைம்மா வுடைப்புலி
வலத்துறை இராமநாத
மதகரி முகம்பெற்ற மறைபல முகஞ்சொற்ற
மகபதி தொழுங் கர்த்தனே. (௬)

பொல்லாத கசடருற வல்லாது நல்லவர்கள்
போகும்வழி சேரினேயேன்
புத்திமுத் தியுமுதவு மத்தவுனே யடையாது
புத்தமுர்தமே ரத்னமே
இல்லாத வுருவுடைய மதனகுரு பீடமே
யென்னுயிரினுஞ் சிறந்த
யின்பமேயென்றுமுழு வன்புடைய மங்கையரை
யெண்ணுவே னுய்வ துளதோ
கல்லாதகுமதியிற் செல்லாமெ ஞானக்
கரும்பே கரும்பி ரசமே
கண்ணே கண்மணியே மணிக்குளுறை சோதியே
கற்பகப் பூஞ்சோலையே
வல்லாகு முலையார்க ளுலவாவயற் புலி
வலத்துறை இராமநாத
மதகரி முகம்பெற்ற மறைபல முகஞ்சொற்ற
மகபதி தொழுங் கர்த்தனே. (௭)

விண்ணுறு தருபங்கயச் செங்கை யுமையம்மை
வேட்டவைதருஞ் சதுர்த்தி
விரதமதனுட்டித்து மெய்யாக மங்கள்சொல்
விதிப்படி யரிச்சனைசெயக்
கண்ணுறுபூங்குழற் கவுரிபாற் பரசிவக்
கடவுளொடு மமரிழைத்த

கந்தடு நெடும்புயச் சிந்துரா சூரனைக்
காதிமோதிக் குமைத்திட்
டென்றுறு நாமரூபங்கடந்திடு
மெந்தையின் னருளதே படிவமா
யெய்ந்திடுகே ணைசராய்ப் போந்து சிந்துரா நுதலி
விட்டவரு ளென்று மறவேன்
மண்ணுறு பேரழின் மடந்தையர்கண் மலிபுலி
வலத்துறை இராமநாத
மதகரி முகம்பெற்ற மறைபல முகஞ்சொற்ற
மகபதி தொழுங் கர்த்தனே. (அ)

கொன்றைப் பிறைப்புனற் கோடீர முன்னிலவு
கொட்டுமேழிட்ட நுதலுங்
குண்டல முறச்செவிக ளுங்கருணை வாரிகுடி
கொண்டமுண்ட கவிழிகளு
மன்றலுறு மிச்சை ஞானங் கிரியை யென்னுமு
மதச்சுவடு மொருமருப்பு
மன்னுகைமுகங்க ளோரைந்து மீரைந்தெனு
மலர்க்கர மொடும் படைகளும்
வென்றிமுந் நான்மார்பு மண்டகோடிகண் முழுது
மேவுபே ருதர வழகும்
வெம்மல மகற்றுமிரு செம்மலர்க்கழலிணையும்
வேட்டுளத் தென்று மறவேன்
வன்றகைய மள்ளர்கண மல்கிய வயர்ப்புலி
வலத்துறை இராம நாத
மதகரி முகம்பெற்ற மறைபல முகஞ்சொற்ற
மகபதி தொழுங் கர்த்தனே, (௯)

விரையார் மலர்க்கழற் கொன்றுண்டு தமியனேன்
விண்ணப்ப மெய்ம்மை யொருவா

வேதநெறி சைவநெறி பத்திநெறிமோன மெஞ்
ஞானநெறி வழியொழுகியே
யுரைபெறு மெழுத்தைந்த பூதிசாதனமலா
லுறுதியொன் றின்மை தெள்ளி
யுன்னடிக்குன்னடியர் பொன்னடிக்கடிமையா
மூறுதிபெற வருள்புரிகுவாய்
தாதல மனைத்தையு மளித்திடும்பேருட்
டாய்சித்தி புத்தி மருவுஞ்
சச்சிதானந்த வானந்த சிற்பரவரவ
சஞ்சல பணிப்புசங்க
வரோதய கணேச சந்திரசூட நீள்புலி
வலத்துறை இராமநாத
மதகரி முகம்பெற்ற மறைபல முகஞ்சொற்ற
மகபதி தொழுங் கர்த்தனே. (௰)

அதி-ஆசரிய விருத்தம் முற்றிற்று.

---

## கட்டளைக் கலித்துறை.

மண்ணே கல்யாணமடந்தையர்மோகவலையிற்சிக்கி,
யுண்ணேயமின் றியுழன்றேற்கு முய்யுமுறுதியுண்டோ
பண்ணேயிசையின் பரப்பே புவனப் பரப்பினுக்கோர்
கண்ணேபுலிவலம்வாழ் ராமநாதக் கணபதியே. (௧)

சாவேபிறப்பெனும் வெஞ்சுழலிற்பட்டுதேட்டழிந்து
செய்வேய்கறங்கெனத்திண்டாடுவேனருள்சேர்வதுண் [டோ
கோவேயிருசித்தியேமணியேகொழுங்கற்பகப்பூங்
காவேபுலிவலம்வாழ் ராமநாதக் கணபதியே. (௨)

வாரேறுகொங்கையர்மோகாடவிக்குண்மயங்கிக் கண்
ஆரேறதாகியுழல் வேனுங்குய்யுமுறுதியுண்டொ [ணீ

போரேறுகைக்கும் பிரானருளித்தபுதல்வவருட்
காரேபுலிவலம்வாழ் ராமநாதக் கணபதியே. (ரு)

ஆகாமியம் விளையாது பாராத்துவமருந்தி
யோகாலயம்புகுந்துன் னருளாற் சஞ்சிதமுமுடைந்
தாகாரஞானமனோலயவின் பமடையவந்து
காகாபுலிவலம்வாழ் ராமநாதக் கணபதியே. (சா)

பெரும்பேயர்நட்பைப்பிரியேன்கின்றொண்டர்கள்பேர
விரும்பேனிடேதவழியையல்லாதுவிதிதமுவேலையை
னரும்பேறடைவதற்கியானருள்வெள்ளத்தேக்குமுங்
கரும்பேபுலிவலம்வாழ் ராமநாதக் கணபதியே. [கட்

பண்டாரமுமொக்கன்மக்கண்மடந்தையர்பற்றென்றெ
[ண்ணிக்
கிண்டாடவேனமன்சிற்றத்துக்கென்னினிச்செய்வனய்
தண்டாதவண்டப்பரப்புமசராசரங்கண்முற்றுங் [யா
கண்டாய்புலிவலம்வாழ் ராமநாதக்கணபதியே. (சா)

வம்பானபுல்லியர் சல்லியமார்க்கமயலிகந்தே
வெம்பாசவன்பகைவிட்டும்சிவநெறிமேவலென்றோ
கும்பாதிகாரியம்போலுலகாக்குமங்குரவசெய்யிற்
கம்பார்புலிவலம்வாழ் ராமநாதக் கணபதியே. (எ)

மெய்த்தாயினுமினியாயுனைவேண்டி விரத்தியுற்றே
பித்தாயுலகைமறந்தின்பவீடுறும்பெற்றிதந்தாள்
சத்தாயசத்துஞ்சதசத்துமாகித் தழைக்கமலங்
கைத்தாய்புலிவலம்வாழ் ராமநாதக் கணபதியே. (அ)

தேனார்மொழியர் விழிவழியே மனஞ்செல்லமருண்
டானதமோகச் சுழித்தலைப்பட்டலைவேனைவந்தாழ்
ஞானகரகிருபாகரயோக குணாகரனே

காணுர்புலிவலம்வாழ் ராமநாதக் கணபதியே. (௬)

சற்றுமினுமிரங்காயென்கொலோவன்னைதான்பருவ
முற்றுதசேயைமுனிந்திடுமோமுனிந்தாலுமுட
னுற்றுதரிப்பதற்கையமுண்டோவுரையாயுறையுங்
கற்றூர்புலிவலம்வாழ் ராமநாதக் கணபதியே. (௰)

## வேறு.

புலிவலத்திராமநாதப் பிள்ளையார் புகழுஞ்சித்தி
வலிகெழுபுத்தியென்னும் வனிதையாருளும் வாழி
யொலிகடற் புவியும் விண்ணோருலகமும் வாழிசைவ
மலிவளநீறுமக்க மணியுமைந் தெழுத்தும் வாழி.

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

புலிவலம்,

# அழகிய தேவி அம்மன் பேரில்

## ஆசிரிய விருத்தம்.

வளரொளிமடங்காமணிக் கணபணுடவிய
வாளரவினுச்சிவைத்த,
மானிலத்தருமுன்னே யொருவர் விளையாட்டாக
வந்திப்பரெனினு மவர்பால்,
வரையாததிருவருள் சுரந்து சிந்தித்தன
மருதமழகையரசனென்ன,
மாறுதசெல்வப் பெருக்கமொடு நன்மனைவி
மன்றன் மார்க்கண்டர்போலுங்,
தளராதவறிவுடைச் சந்ததியுநல்லவர்கள்
சார்பு மேலான குணமுங்

## இராமநாதபிள்ளையார் பாடல்.

தாழாதகொடையுமயனீளாதமதியுஞ்
சலிக்காத புகழுநல்குந்
தாயிருக்கவுமேங்கு நீரிருக்கவுமலர்க
டழிரிருக்கவுமெண்ணிஞா,
ருனிருக்கவுமொழியவாயிருக்கவுமிணைத்
தாளிருக்கவும் வலம்வரப்
பிளவின்மதியொடு மன்னை பொன்னடித் துணைபரவு
பெற்றியிரியாதுகையிற்
பெருகு நவநீதமதிருக்க நெய்க்கலமரும்
பேதையர்கள்வினையென்கொலோ,
பெண்ணரசி நீதந்த பிச்சையன்றோமகப்
பேரரையன் வாழ்வும் வெள்ளைப்
பிருமிபதிவாழ்வுமால் பெருவாழ்வுஞானப்
பெருக்கேயருட்கொண்டலே,
கிளரொளிச் சிந்தாமணிக்குவியலேயிகை
கேடிலாக் கர்ப்பதருவே,
கிஞ்சுகவிதழ்ப் பசியவஞ்சுகப் பேடையே
கேசரர்கள் பேசுமயிலே,
கின்னரமிதென்ன விளமின்னிடைய ராடவர்கள்
கெழுமிசிறைபுலிவலத்தாய்,
கிரியரையர் குமரிதிரிபுரதகனிகவுரியழகிய
தேவியம்மை யுமையே.

முற்றிற்று.



உ

சிவமயம்.

கணபதிதுணை.

---

கூத்தனூர்

ரா. ம. வெங்கடாசலச் செட்டியார்

குமாரர்

# இராமனுதச்செட்டியார்

இயற்றியது.

---

## எண்சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

பொன்னிசையு மணிமார்பத்திகிரிச்செங்கைப்
புங்கவனுஞ்செங்கமலப் பொகுட்டுளானு
மின்னிசையின் வச்சிரத்தின் படையினானும்
விரும்பி யிரு கரங்குவிக்கும் விமலன்றன்னை
பின்னிசை நான் மறைப்பொருளை யுலகமேத்து
மெம்மானை யெனையாளுமிறைவன்றன்னை
மன்னிசைகொள்புலிவலத்தி லிராமநாத
வாரணமாமுகத்தானை வணக்கஞ்செய்வாம். (க)

புரமெரியச்சிரு நகை செயானுஞ்செல்வப்
பொருப்பரையன் திருமகளும் விருப்பினோடே
தரவருமெம்பெருமானை யமரரேத்துந்
தத்துவத்தின்றனிப்பொருளைப் பத்தியோடும்
பரவிநறு மலர் தூவிக் கரங்கள் கூப்பிப்
படியில் விழுந்தெழுந்து துதி படிப்போர்வேண்டும்

வரமுதவு புலிவலத்திராமநாத
வாரணமாமுகத்தானை வணக்கஞ்செய்வாம்.(௨)

சருக்கரைதேன் பாலமுது நிவேதிப்பித்துத்
தாள்வணங்கி யகமுருகித் தரிசிப்போர்தங்
கருக்கரையக் கடைக்கணருள் புரியுமைங்கைக்
கணபதியை யமரர்பகைக்கழிப்பா னெண்ணித்
தருக்கி வருங்கயமுகனைக்கோடொன்றாலே
தாக்கியவனுயிர் கவருந்தலைவன்றன்னை
மருக்கமழும் புலிவலத்தி ராமநாத
வாரணமாமுகத்தானை வணக்கஞ்செய்வாம்.(௩)

தேசுற்ற மணிமௌலி புனைந்த திங்கட்
செழுங்கவிகை நிழற்ற வொரு செங்கோலோச்சி
யாசற்ற தருநிழல்வாழமரர் கோமா
னாரொன்றே தருநியென வறுகால் வண்டு
மூசுற்ற நறுமலராற் பூசிப்போர்க்கு
முழுதுலகும் புரக்கவருண் முதல்வன்றன்னை
மாசற்றபுலிவலத்திராமநாத
வாரணமாமுகத்தானைவணக்கஞ்செய்வாம். (௪)

ஆடல்புரி முடிகத்திலருளாஞ்சித்தி
யம்மையொடு புத்தியெனுமரிவைதானுங்
கூடவிருமருங்கிருக்குங்கோலங்கண்டு
கும்பிட்டோர் குறைதவிர்த்தாட்கொள்ளுந்தே
யேடலரும் நறுமலர்கொண்டருச்சிப்போரை [வை
யிருக்கறியாப்பதநிழற்கீழிருத்துவானை
மாடமலிபுலிவலத்தி ராமநாத
வாரணமாமுகத்தானை வணக்கஞ்செய்வாம்.(௫)

ஐங்கரமுநுதல்விழியுமொற்றைக்கொம்பு

...யுமளிகள் பாடுக்
...ணிமார்பு மயன்மால் காணுத்
...ணப்பநுமத் திருத்தானுந் துதிக்குமன்பர்
தங்கள்வினைக்கொடக் கறுத்துப்பரமானந்தந்
தருவானைநவமணிப்பொற்றடமாடத்தே
மங்குல்படி புலிவலத்திலிராமநாத்
வாரணமாமுகத்தானைவணக்கஞ்செய்வாம். (௬)

பொருதிரைக்கார்வேலைபுடைசூழுமிந்தப்
பூதலத்தைப்பொற்குவையைப் பூவைமாரைக்
கருதிமனக்கவற்சியொடுங்காலம்போக்கிக்
கதியிழக்குமதியிலிகள் கழகங்கூடா
தருகியகத்தருள் வடிவமுன்னுமேவார்கட்
கொப்பிலாப்பதமுதவுமொருவன்றன்னை
மருவியசீர்ப்புலிவலத்திலிராமநாத
வாரணமாமுகத்தானைவணக்கஞ்செய்வாம். (௭)

அலரயன்மாற்கரியானைத் தேவர்போற்று
மாரணத்தின்பொருளைமலையரையன்றந்த
குலமகடன்றிருமகனைக் கருணைந்தக்
குரைகடலைக்குணக்குன்றைக்கோதிலாத
தலமுழுதுமாக்கி யளித்தொழிக்குந்தேவைச்
சாலிகளின்கதிர்சூதைக் கனியிற்சாடி
மலைகழனிப்புலிவலத்திலிராமநாத
வாரணமாமுகத்தானைவணக்கஞ்செய்வாம். (௮)

மையணியுங்களப் பெருமான்றவத்தால்வந்த
வானவனை ஞானத்தின்வடிவானானைப்
பையரவப்பணிபுனைசெஞ்சடையினானைப்
பார்முதலைம்பூதமெனப்பரவினானை
செய்யழலிற் பஞ்செனவென்வினைபாழாக்கி

திசெபகலிலாவிடத்தா திறத்த...
வையமகிழ்புளிவலத்திஸ்ரீராமநாத
வாரணமாமுகத்தானை வணக்கஞ்செய்வா...

எழுத்தெவைக்கு மகரமுதலானவாபோ [ல்]
லெத்தெய்வங்களுக்கு முன்னாயிருப்பான்றன்னை
பழுத்திடுநான்மறைப்பொருளைக் கருத்திற்கெட்டா
பண்ணவனைத் தண்ணளியில் பாவியேனைப் [ப்...]
புழுத்தமலக்கருக் குழியிற்புகாமற்காக்கும்
புண்ணியனைப்புங்கவரும் புவியுளோரும்
வழுத்துமியற் புளிவலத்திஸ்ரீராமநாத
வாரணமாமுகத்தானைவணக்கஞ்செய்வாம். (௰)

பணவரவக்கடிதடச்செம்பவளச்செவ்வாய்ப்
பைந்தொடிப்பாவையர்மோகப்பௌவத்தாழ்ந்...
குணமறிவுகுலமொழுக்கமுழுதும் போக்கிக்
கோலமழிந்துழன்றலையுங் கொடியனேனை
யிணையடித்தாமரை நிழற்கீழிருத்துவானை
யேகனையென்னுயிர்க்குயிரையிடங்கடோறு
மணமலியும் புளிவலத்திஸ்ரீராமநாத
வாரணமாமுகத்தானைவணக்கஞ்செய்வாம். (௰...

முற்றுப்பெற்றது.